# சிகாகோ பிரசங்கம்







சுவாமி விவேகாநந்தர்

# சிகாகோ பிரசங்கம்

சுவாமி விவேகாநந்தர்
சர்வசமய ஆராய்ச்சிக் கழகத்திலே
செய்த விரிவுரைகள்

---

சுவாமி விபுலாநந்தரால்
மொழிபெயர்க்கப்பட்டது




இரண்டாம் பதிப்பு

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர்

1932



விலை அணா 5.



சிகாகோவில் நடந்த சர்வசமய ஆராய்ச்சிக் கழகம்

தலைவருக்கு வலது பக்கத்தில் நான்காவதாக உட்கார்ந்திருப்பவர் சுவாமி விவேகாநந்தர்

# சிகாகோ பிரசங்கம்

## சர்வசமய ஆராய்ச்சிக் கழகத்திலே செய்த விரிவுரைகள்

1893-ம் ஆண்டு செப்டம்பர்மீ 11-ந்தேதியன்று, சிகாகோ நகரத்திலே பூவுலகிற்குப் பொதுவாகக்கூடிய சமயவாராய்ச்சிப் பெருங்கழகத்திலே வாழ்த்துரைக்கு மறுமொழியாக அருளிச் செய்தது.

அமெரிக்கா நாட்டு சகோதரிகளே, சகோதரர்களே !



அன்பினோடும் ஆர்வத்தினோடும் நீங்கள் அளித்த வாழ்த்துரைக்கு மறுமொழி கூற யான் எழுந்து நிற்கும் இச்செயலானது சொல்லுதற்கரிய உவகையினாலே எனது உள்ளத்தை நிறைவுறச் செய்கின்றது. உலகிலுள்ள துறவொழுக்க நிலயங்களிலே மிகப் பழமைவாய்ந்த நிலயத்தின் பெயரினாலே நான் உங்களுக்கு நன்றி கூறுகின்றேன் ; எல்லாச் சமயங்களுக்குந் தாயாகிய சமயத்தின் பெயரினாலே நான் உங்களுக்கு நன்றி கூறுகின்றேன் ;

பல்வேறு வகுப்பினராய்ப் பலபிரிவாகிய மதங்களைக் கைக்கொண்டொழுகுங் கோடிக்கணக்கான இந்திய மக்களின் பெயரினுலே நான் உங்களுக்கு நன்றி கூறுகின்றேன்.

இந்த மேடைமீதுள்ள உரையாளருட் சிலர் கிழக்கு நாட்டிலிருந்து வந்த பிரதிநிதிகளைக் குறித்துப் பேசும்பொழுது, சேய்மையிலுள்ள மக்கட்கூட்டத்தினரிடையேயிருந்து வந்த இப்பிரதிநிதிகள் பண்புடைமையாகிய எண்ணத்தினை எல்லா நாட்டிற்குங் கொண்டு செல்லுகின்ற பெருமைக்கு உரிமையுடையார் எனக் கூறினர்; அதற்காக நான் அவர்களுக்கு நன்றி கூறுகின்றேன். (பிறருடைய கொள்கையை வெறுத்தொதுக்காத) பண்புடைமை (அக்கொள்கைகளை ஏற்றுக்கொள்ளுகின்ற) பொதுநோக்கு என்னுமிரண்டினையும் உலகிற்குக் கற்பித்த சமயத்துக்கு நான் உரியவனெனப் பெருமை பாராட்டுகின்றேன். எல்லாச் சமயங்களையும் அன்பினோடு நோக்குகின்ற பண்புடைமையிலே எங்களுக்கு நம்பிக்கையுண்டு. அது மாத்திரமல்ல. எல்லாச் சமயங்களையும் உண்மை மார்க்கங்களென நாங்கள் ஏற்றுக்கொள்ளுகிறோம். உலகத்திலுள்ள எல்லாச் சாதியாராலும் மதங்களாலும் துன்புறுத்தி யொதுக்கப்பட்ட மக்களுக்கு அடைக்கலந் தந்து காப்பாற்றிய ஒரு சாதிக்கு நான் உரியேன் என்பதைக் குறித்துப் பெருமைபாராட்டுகிறேன். உரோமருடைய கொடுஞ்செயலினுலே தமது பரிசுத்த தேவாலயம் சின்னு பின்னப்பட்ட ஆண்டிலே தென்னிந்தியாவுக்கு வந்து

எங்களிடம் அடைக்கலம் புகுந்த கலப்பில்லாத இஸ்ரவேல் சாதியாரில் மிஞ்சியிருந்தவர்களை நாங்கள் அன்பினேடு அணைத்துக்கொண்டோம் என்பதனை உங்களுக்கு எடுத்துச் சொல்லும் பெருமை எனக்கு உண்டு. மகத்துவம் பொருந்திய சோராஸ்திரிய சாதியாரிலே எஞ்சியிருந்தோருக்குப் புகலிடங் கொடுத்து இன்றும் பாதுகாத்துவருகிற ஒரு சமயத்துக்கு யான் உரியேன் எனப் பெருமை பாராட்டுகின்றேன். எனதன்புள்ள சகோதரர்களே! சிறு வயதிலே நான் பலமுறை ஓதியதும், இன்னும் கோடிக்கணக்கான மானிடர்களாலே ஓதப்படுவது மாகிய ஒரு கீதத்திலிருந்து சில அடிகளை எடுத்து உங்கள் முன்னிலையிலே சொல்லுவேன்.

“எண்ணுமிரு நிலத்தெழுந்த பலநதியு
மிறுதியில்வந் தெறிநீர் வேலை
நண்ணுகின்ற வியல்பதுபோற் பலவேறு
தகைமையராய் ஞான நாடும்
மண்ணகத்தோர் செல்லுநெறி செம்மையதாய்க்
கோடணையாய் மருவு மேனும்
புண்ணியனே நினையடையு மார்க்கமவை
யனைத்துமெனப் புகல்வன் யானே.”

இதுவரை ஒருகாலத்திலும் ஏற்படாத மகா மகத்துவம் பொருந்திய சர்வசமய ஆராய்ச்சிக் கழக மாகிய இம்மகா சபையானது கீதையிலே கூறப்பட்டிருக்கும் ஒரு பெரிய அற்புதமான உண்மையைத் தெளிவுபடுத்தி வற்புறுத்துகின்றது.

"மெய்வகைய திதுவென்ன வேண்டியவர் வேண்டியன வவ்வகைய தெய்வமுமா யளிப்பேனும் யானே காண்." "யாதாயினும் ஒரு மார்க்கத்தைப் பின்பற்றி என்னை யாவன் நாடுகின்றானோ, யான் அவனை அடைகின்றேன். ஈற்றிலே என்னை அடைகின்ற மார்க்கங்களிலே எல்லா மக்களும் முயன்று செல்லுகின்றார்கள்." மத விகற்பங்களும், மதச் சண்டைகளும், அவற்றினின்று ஏற்பட்ட கொடிய பிடிவாதமும் ஆகிய இவை இந்த அழகிய பூவுலகத்தை நெடிது பற்றியிருந்தன. இந் நிலவுலகத்தை அவை கொடுஞ்செயலினாலே நிறைத்துவிட்டன. மீட்டும் மீட்டும் மானிட உதிரத்தை எங்கும் பரவச் செய்து நாகரீக வாழ்க்கையை அழித்து மக்கட் கூட்டத்தினரைத் திகைக்கும்படி செய்துவிட்டன. இந்தக் கொடிய பசாசுகள் தோன்றாதிருந்தால் மக்கட் கூட்டமானது இப்பொழுது இருக்கின்ற நிலையினும் பார்க்க மிகவும் உன்னதமான நிலையில் இருந்திருக்கும். குறித்த பசாசுகள் அழிந்து போகிற காலம் நெருங்கிவிட்டது. இன்று காலையிலே இந்த மகாசபை கூடும்பொழுது அடித்த மங்கல மணியானது மூடக் கொள்கைகளின் சாமணியாகுக. வாளினாலோ, எழுதுகோலினாலோ, ஒருவரை யொருவர் பகைக்கின்ற கொடுஞ் செயலானது அகன்று விடுக. ஒரே நோக்கத்தினைக் கொண்டு ஒன்றினையே நாடிச் செல்லுகின்ற மக்களிடையே அன்பினோடு கூடிய எண்ணங்கள் நிறைவு பெறுக.



## யாம் உடன்படாதிருப்பது ஏன்?

1893-ம்௵ செப்டம்பர்மீ 15௳ அருளிச் செய்தது.

நான் உங்களுக்கு ஒரு சிறு கதை சொல்லுகிறேன். சிறிது முன்பாக மிகவும் அழகாகப் பேசி முடித்த உரையாளர் ஒருவர் "ஒருவரை யொருவர் நிந்திப்பதை ஒழித்துவிடுவோமாக," எனக் கூறி வேறுபாடுகள் எக்காலத்திலும் அதிகரித்துக் கிடப்பதை யுன்னி மனம் வருந்தினர்.

இந்த வேறுபாட்டினது காரணத்தைத் தெளிவு படுத்துகிற ஒரு கதையை உங்களுக்குச் சொல்லலாமென நான் நினைக்கிறேன்.

ஒரு கிணற்றிலே ஒரு தவளை வசித்து வந்தது. அது அங்கு நீண்ட காலமாக உயிர் வாழ்ந்தது. அது அங்கே பிறந்து அங்கே வளர்ந்து வந்தது. ஆயினும் அது சிறிய தவளையே. அதினுடைய கண்கள் இருந்தனவா அல்லாவிடின் இல்லாது போயினவா, என ஆராய்வதற்குப் பரிணம வாதிகள் ஒருவரும் அக்காலத்தில் அவ்விடத்தில் இருக்கவில்லை. ஆயினும் நம்முடைய கதையின் பொருட்டாக அத்தவளைக்குக் கண்கள் இருந்தனவென்றே வைத்துக் கொள்ளுவோம். நாள்தோறும் அது புழுக்களையும் கிருமிகளையும் அகற்றி இக்காலத்திலுள்ள கிட விஞ்ஞான சாஸ்திரிகளை ஒப்ப மிகவும் வலிமையோடு வாழ்ந்து வந்தது. இவ்வண்ணம் வாழ்ந்து சிறிது பருத்துக்கொழுத்

திருந்தது. ஒருநாள் கடலிலே வாழுகின்ற ஒருதவளை வந்து அந்தக் கிணற்றினுள்ளே விழுந்தது.

"நீ எங்கிருந்து வருகிறாய்?"

"நான் கடலிலிருந்து வருகிறேன்."

"கடலா! அது எவ்வளவு பெரியது? என்னுடைய கிணற்றளவு பெரியதாக விருக்குமா?" என்று கூறிக் கிணற்றின் ஒருபக்கத்திலிருந்து மற்றப் பக்கத்துக்குப் பாய்ந்தது. "என் நண்பனே கடலினை உன்னுடைய சிறிய கிணற்றுக்கு எவ்வாறு ஒப்பிடுதல் கூடும்?" எனக் கடலிலிருந்துவந்த மண்டுகம்கூறியது.

மற்றத் தவளை ஒருபாய்ச்சல் பாய்ந்து, "உன்னுடைய கடல் இவ்வளவு பெரியதா?" என வினவினது.

"கடலை உன்னுடைய கிணற்றுக்கு ஒப்பிடுவது வீண்வார்த்தை யன்றோ!"

"நல்லது, என்னுடைய கிணற்றினும் பார்க்க ஒன்றும் பெரிதாயிருத்தல் கூடாது. உண்டு என்று சொல்லுகின்ற இவன் பொய்யன். இவனை வெளியே அகற்றிவிடல் வேண்டும்," என்று கூபமண்டுகம் (கிணற்றுத் தவளை) கூறியது.

எப்பொழுதும் இத்தகைய இடைஞ்சலே இருந்து வருகிறது.

நான் ஒரு இந்து. என்னுடைய சிறிய கிணற்றுக்குள்ளே இருந்துகொண்டு உலக முழுவதும் எனது சிறிய கிணறென்று நான் நினைத்துக்கொண்டிருக்கிறேன். கிறிஸ்தவன் தனது சிறிய கிணற்றில் இருந்து கொண்டு உலக முழுவதும் தனது கிணறென்று எண்ணுகிறான். முகம்மதியனும் தனது

சிறிய கிணற்றினுள் இருந்து கொண்டு அதுவே உலக முழுவதுமென எண்ணுகிறான். நாங்கள் ஏற்படுத்திக்கொண்ட சிறுச்சிறு உலகங்களின் எல்லைகளை அழித்து விடுகிற பெரிய முயற்சியிலே முற்பட்டு நிற்கின்ற அமெரிக்கா வாசிகளாகிய உங்களுக்கு நான் நன்றி கூறுகின்றேன். மேல் வருங் காலத்தில் உங்கள் நோக்கத்தை நீங்கள் அடைவதற்கு ஆண்டவன் உங்களுக்கு உதவி புரிவானாக.



## இந்து சமயம்



1893-ம்ஆ செப்டம்பர்மீ 19உ சர்வ சமய ஆராய்ச்சிக் கழகத்திலே அருளிச்செய்தது.

சரித்திரகாலத்துக்கு முற்பட்ட காலத்திலே தோன்றி இப்பொழுதும் நிலைபெற்று விளங்குகின்ற சமயங்கள் மூன்று உள. அவையாவன இந்துசமயம், சொராஸ்திரிய சமயம், யூதசமயம் என்பன. இவை பலத்த தாக்கல்களினாலே மொத்துண்டும் அழிந்து போகா திருப்பது இவற்றினது உள்ளான வலிமையைக் காட்டுகின்றது. யூதசமயமானது கிறிஸ்து சமயத்தைத் தன்னோடு ஒன்றுபடுத்தாது அனைத்தினையும்வென்ற புதல்வியினாலே (கிறிஸ்து சமயத்தினாலே) தனது இருப்பிடத்தி லிருந்து வெளியே துரத்தப்பட்டு விட்டது. பெருமை பொருந்திய சொராஸ்திரிய சமயத்தின் சரித்திரத்தைச் சொல்லுவதற்கு ஒரு சில பார்ஸிக்காரர் மாத்திரமே யிருக்

கின்றனர். இவை இரண்டும் இவ்வாருக, இந்துமதத்தின் நிலையெதுவென ஆராய்வோம். இந்தியாவிலே ஒன்றன்பின் ஒன்ருகப் பல மதங்கள் எழுந்து வைதிக மார்க்கத்தை அஸ்திவாரமுதல் அசைத்தன வாயினும், அந்த மார்க்கமானது பெரிய பூகம்ப அதிர்ச்சியினுலே அகன்ற கடல்நீர் மீண்டும் வந்து ஒன்றுகூடுவது போலக் கலகம் நீங்கிய பின்பு ஆயிரமடங்கு வலிமையோடு உட்பிரிவுகளனைத்தினையும் தாய்ச் சமயமாகிய தன்னேடு ஒன்றுகூட்டிப் பொலிவுற்று விளங்கியது.

இக்காலத்து விஞ்ஞான சாஸ்திரங்களிலுள்ள புத்தம்புதிய முடிபுகள் எதற்கு ஓர் எதிரொலி நீர்மையாகக் காணப்படுகின்றனவோ, அத்தகைய பெருமைவாய்ந்த வேதாந்தத் தத்துவ ஞானத்தினது மிக வுயர்ந்த கொள்கைகள் முதல் பல திறப்பட்ட புராணக் கதைகளோடு கூடிய விக்கிரகாராதனைகள் ஈருகப் பௌத்தருடைய அஞ்ஞேய வாதமும் ஜைனருடைய நிரீச்சுரவாதமும் உட்பட, எல்லாக் கொள்கைகளுக்கும் இந்து மதத்திலே இடமுண்டு.

பெரிதும் வேறுபட்டு நின்ற இத்தனைத் துறைகள் வந்து ஒன்று சேர்தற்குரிய பொதுவாகிய மையம் எங்கு உளது என்னும் வினு எழுகின்றது. ஒன்றினேடொன்று மறுதலையாகத் தோற்றுகிற கொள்கைகளுக்குப் பொதுவாகிய ஆதாரம் எங்கு உளது என்னும் வினுவுக்கு நான் விடை கூற முயலுவேன்.

இந்துக்கள் வேதம் எனக் கொள்ளுகிற ஆப்த வாக்கியத்தின் மூலமாகத் தங்களுடைய சமயத்தைப் பெற்றிருக்கின்றார்கள். வேதங்கள் முதலும் முடிவும் இல்லாதன என்பது அவர்களது கொள்கை. ஒரு புத்தகத்துக்கு முதலும் முடிவும் இல்லாதிருப்பது எங்ஙனம் ஆதல் கூடும் என இச் சபையிலுள்ளோர் கூடி நகையிடலாம். வேதங்களென்றால் புத்தகங்களென்று கருதவேண்டாம். வெவ்வேறு காலத்திலே வெவ்வேறு மக்களாற் காணப்பட்ட ஆத்மீக முடிபுகள் ஒன்றுசேர்த்து வைக்கப்பட்டிருக்கின்ற களஞ்சியமே அவை. பூமியின் ஆகர்ஷணத்தைப் பற்றிய விதியினை விஞ்ஞான சாஸ்திரிகள் கண்டு பிடிக்கு முன்னும் அது இருந்தது; மக்களெல்லாம் அதை மறந்துவிட்ட பின்னும் அது இருக்கும். ஆத்மீக உலகத்திலுள்ள விதிகளும் அத்தகையனவே. ஓர் ஆன்மாவுக்கும் மற்றோர் ஆன்மாவுக்கும் இடையேயுள்ள தர்மீக, ஆத்மீக இயைபுகளும், தனிமையாகிய ஆன்மாக்களுக்கும் அவ்வான்மாக்களுக்குத் தந்தையாயிருப்பவருக்கும் இடையேயுள்ள தொடர்புகளும் கண்டறியப்படுவதற்கு முன்பும் இருந்தன. நாம் அவற்றை மறந்துவிட்டாலும் அப்பொழுதும் அவை நிலைபெறுக விருப்பனவேயாம்.

இந்த விதிகளைக் கண்டுபிடித்த ரிஷிகளை நாங்கள் பூரணத்துவத்தை அடைந்தவர்களாக மதித்துப் போற்றுகின்றோம். அவர்களுள் மிகவுயர்ந்தோர் சிலர் பெண்பாலார் என்னுஞ் செய்தியை இந்தச் சபைக்கு நான் சந்தோஷத்தோடு சொல்லுகின்றேன்.

இந்த விதிகள் விதிகளாகக் கருதப்படுமிடத்து, அந்தமில்லாதிருப்பனவாயினும் அவைதமக்கு ஒரு தொடக்கம் இருத்தல்வேண்டுமேயென இவ்விடத்தில் சிலர் வினவுதல்கூடும். சிருஷ்டிக்கு முதலும் முடிவும் இல்லையென வேதங்கள் கூறுகின்றன. உலகிலுள்ள சக்தியின் கூட்டுத்தொகை என்றும் ஒரே அளவாக இருக்கிறது என விஞ்ஞான சாஸ்திரம் தீர்ப்பிடுவதைக் கேள்வியுற்றிருக்கிறோம். ஒரு காலத்தில் ஒன்றும் இல்லாதிருந்தால் இப்பொழுது வெளிப்பட்டுத் தோன்றுகிற சக்தியெல்லாம் எங்கே அடங்கியிருந்தன? இவையெல்லாம் ஒடுங்கியநிலையாகக் கடவுளிடத்தே இருந்தனவாதல் வேண்டும். அப்படியாயின், கடவுள் சிலவேளை ஒடுக்கநிலையிலும், சிலவேளை இயக்க நிலையிலும் இருக்கவேண்டும். அப்படியாயின் அவர் வேறுபடுந் தன்மையராவார். வேறுபடுகின்ற ஒவ்வொரு பொருளும் கலவைப்பொருளாக யிருத்தல் வேண்டும். கலவைப் பொருள் எதுவும் நாசமாதலென்னும் வேறுபாட்டினை ஏற்கும் இயல்பினதேயாம். அப்படியாயின், ஆண்டவன் இறக்கவேண்டும். அது பொருந்தா முடிபு. ஆதலினாலே சிருஷ்டிஇல்லாதிருந்த காலம் இல்லை யென்பது முடிவாகின்றது. ஒப்பு நோக்கிக் கூறுவதாக விருந்தால் சிருஷ்டியும் சிருஷ்டிகரும் சமதூரத்திலே முதலும் முடிவுமின்றி ஓடிக்கொண்டிருக்கின்ற இரண்டு ரேகைக்குச் சமமெனக்கொள்ளுதல் வேண்டும். என்றும் முயன்றுகொண்டிருக்கிற தெய்வத்தின் வலிமையினாலே, அவ்வியக்கத்திலிருந்து ஒன்றின்பின் ஒன்றாகப் பல புவ

னங்கள் தோற்றி ஒரு காலத்துக்கு நிலைத்திருந்து அழிந்து போகின்றன. "முந்திய கற்பத்திலுள்ள சூரிய சந்திரரைப் போல, ஆண்டவன் சூரிய சந்திரரைப் படைத்தான்" என்று பிராமணச் சிறுவன் தினந்தோறும் தனது மந்திர ஜபத்தோடு சொல்லுகின்றான்.

நான் இங்கே நின்று கண்களை மூடிக்கொண்டு "நான்" "நான்" "நான்" என்று நினைத்தால் எனது கண்ணின் முன்னே என்ன எண்ணந்தோன்றுகிறது? சரீரத்தைக் குறித்த எண்ணம் தோன்றுகிறது. அப்படியாயின் நான் சடப்பொருட் கூட்டத்தினால் உருப்பட்ட ஒரு பிழம்புதானா? இல்லை. நான் உடலிலே வசிக்கிற ஆன்மா. நான் உடலல்ல. உடல் இறந்துவிடும். நான் இறக்க மாட்டேன். நான் இவ்வுடலி லிருக்கிறேன். அது வீழ்ந்துவிடும். ஆயினும், நான் என்றும் வாழ்ந்து கொண்டுபோவேன். எனக்கு ஒரு பழைமையுமுண்டு. ஆன்மா சிருஷ்டிக்கப்பட்டதில்லை. சிருஷ்டி என்றால் ஒருவகைக் கூட்டம். கூடியது எதிர் காலத்தில் நிச்சயமாகவே அழிந்துபோம். ஆன்மா படைக்கப்பட்டதாயின் அது அழியவும் வேண்டும். சிலர் சந்தோஷமுள்ளவர்களாகப் பிறந்து பூரண தேக சுகத்தோடும் அழகிய உடலோடும், மனவலிமையோடும் வாழுகிறார்கள். அவர்களுடைய குறைகளெல்லாம் நிறைவாகின்றன. மற்றையோர் துன்புற்றவர்களாகக் கைகால் முதலிய அவயவம் இல்லாதவர்களாக மூடர்களாகப் பிறந்து கவலையோடு கூடிய சீவியத்தை நடத்துகிறார்கள்.

அவர்கள் எல்லோரும் படைக்கப்பட்டவர்களாக இருந்தால், இரக்கமும் நீதியுமுள்ள கடவுள் ஒருவரைச் சந்தோஷ சித்தராகவும் மற்றொருவரைத் துன்புற்றவராகவும் படைத்தது ஏன்? அவர் ஏன் பட்சபாதமுள்ளவராக இருக்கிறார்? இப்பொழுது துன்புற்றால் மேல்வரும் சீவியத்திலே இன்புறுதல் கூடும் என்று சொல்லுவதும் பொருந்தாது. இரக்கமுள்ள நீதியான கடவுளினது ஆளுகையிலே" எந்த மனிதனும் துன்புற வேண்டிய நியாயம் என்ன?

இரண்டாவதாகச் சிருஷ்டி கர்த்தராகிய கடவுள் ஒருவர் உளர் என்னும் கொள்கையானது சர்வ வல்லமையுடைய ஒருவர் தாம் விரும்பியபடி செய்யுங் கொடுஞ் செயலை மாத்திரம் புலப்படுத்துகின்றதேயன்றி மேற்காட்டிய பொருந்தா முடிபைத் தெளிவு படுத்தவில்லை. ஒரு மனிதன் துன்பத்தை அடைவதற்கும் இன்பத்தை அடைவதற்கும் ஏற்பட்ட காரணங்கள் அவன் பிறப்பதற்கு முன்னமே இருந்திருக்கவேண்டும். அவன் முன்பு செய்து கொண்ட கருமங்களின் பயனையே இப்பொழுது அனுபவிக்கின்றான்.

உடலிலும் மனத்திலும் பொருந்தியிருக்கின்ற எல்லாக் குணத்தன்மைகளும் முன்னோரிடமிருந்து உரிமையாகப் பெற்றுக் கொண்ட மன நீர்மைகளால் விளக்கமுறும் என்பர். அல்லவா? சமதூரத்திலே செல்லுகின்ற இரண்டு இயக்கங்கள் இங்கு உள்ளன. ஒன்று மனத்தினைச் சார்ந்தது; மற்றொன்று சடத்தினைச் சார்ந்தது. சடமும்அதனிடத்தினின்று பரிண

மித்த பொருள்களும் அனைத்தினையும் தெளிவு படுத்துவவாயின் ஆன்மா என்று ஒன்று வேண்டிய தில்லை. ஆனால் எண்ணங்கள் சடத்தினின்று தோன் றினவென நிறுவுதல் இயலாததாகும். தத்துவ சாஸ்திர ஆராய்ச்சியின்படி ஏகவாதத்தைக் கைக் கொள்ளவேண்டு மாயின் ஏகான்ம வாதம், ஏகசட வாதத்திலும் பார்க்க நியாயமுறைக்கு ஏற்புடையதா கும். ஆயினும் ஈண்டு இவ்விரண்டும் வேண்டப்படா.

சந்ததி வழியாக உடலானது சில தன்மைகளைப் பெறுகிறது என்பதை நாம் மறுத்தல் கூடாது. இவை உடற்கட்டை மாத்திரம் சார்ந்து நிற்பன. ஒரு குறித்த மனம் குறித்த முறையாக மாத்திரம் இவற்றோடு கூடி நின்று தொழில் புரிதல் கூடும். பூர்வ கர்மங்களினாலே ஆத்மாவினிடத்துச் சிறப்பாக அமைந்திருக்கின்ற வேறு சில தன்மைகளும் உள. ஒரு குறித்த நீர்மையையுடைய ஆன்மாவானது அந்த நீர்மையைத் தோற்றுவிப்பதற்குத் தகுந்த கருவி யாகிய உடலினிடத்தே உதிப்பது பொருத்தமேயாம். இம்முடிபு விஞ்ஞான சாஸ்திரத்துக்கும் பொருத்த மானது. விஞ்ஞான சாஸ்திரம் பழக்கம் பற்றுக் கோடாக வேறுபாடுகள் ஏற்படும் முறையைப் புலப்படுத்துகின்றது. பழக்கமானது ஒரு செயலை மீட்டும் மீட்டுஞ் செய்வதினால் ஏற்படுவது. புதிதாகப் பிறந்த ஒரு சீவனுக்கு உரிய இயற்கைப் பழக்கங் களைத் தெளிவுபடுத்துவதற்குப் பலமுறை செய்யப் பட்ட செயல்கள் உளவெனக் கொள்ளுதல் வேண்டும். அச்செயல்கள் இந்தச் சீவியத்திலே செய்யப்படாதன

வாயின், கழிந்த சீவியங்களிலிருந்துஅவை வந்திருக்க வேண்டும்.

மற்றும் ஒரு குறிப்பு உளது. இவை எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்ளினும் எனது கழிந்துபோன வாழ்க்கையின் நிகழ்ச்சிகள் ஒன்றினையும் நான் நினைவுகூராதிருப்பதற்கு என்ன காரணங்காட்டுதல் கூடும்? இதனை எளிதிலே தெளிவு படுத்தலாம். நான் இப்பொழுது ஆங்கில பாஷையிலே பேசுகிறேன். அது எனது தாய்ப் பாஷையன்று. இப்பொழுது எனது உள்ளத்திலே எனது தாய்ப்பாஷையின் சொற்கள் ஒன்றுமில்லை. நான் அவற்றினைக் கொண்டு வருவதற்கு முயன்றவுடனே அவை விரைவாக ஓடிவருகின்றன. உணர்வோடு கூடிய சாக்கிர நிலையானது மனமென்னும் சமுத்திரத்தின் மேற்பரப்பு மாத்திரமேயாகும். அதன் ஆழத்தினுள்ளே நமது அநுபவங்களெல்லாம் சேமித்து வைக்கப்பட்டிருக்கின்றன. வேண்டிய அளவு முயன்றால் அவற்றை மேலே கொண்டுவருதல் கூடும்; உன்னுடைய பழம் பிறப்பையும் உணர்தல் கூடும்.

இவ்வுண்மையை நேர்முகமாக மெய்ப்பித்துக் காட்டலாம். அங்ஙனம் மெய்ப்பித்துக் காட்டுதலே எந்தக் கொள்கைக்கும் பூரணமாகிய சான்று ஆகும். 'ஞாபகமென்னும் சமுத்திரத்தின் ஆழங்களனைத்தினையும் எட்டுதற்கு உரிய ரகசியத்தை நாங்கள் கண்டறிந்தோமென மகரிஷிகள் கூறுகின்றார்கள். அவர்கள் காட்டிய வழியிலே முயன்றால் பழம் பிறப்பைப் பற்றிய பூரணஞாபகத்தைப் பெறுதல் கூடும்.

தான் ஒரு சித்துப் பொருள் என இந்து சமயி நம்புகிறான். வாளானது இவனைப் பிளக்கமாட்டாது; நெருப்பு இவனைத் தகிக்கமாட்டாது; நீர் இவனைக் கரைக்கமாட்டாது; காற்று இவனை உலர்த்தமாட்டாது. ஒவ்வொரு ஆன்மாவும் எல்லைகாணவொண்ணாத ஒவ்வொரு சக்கரத்தை நிகர்த்தது. உடலே சக்கரத்தின் மையம். இந்த மையம் ஓர் உடலத்திலிருந்து மற்றோர் உடலத்திற்கு மாறுவதே மரணமெனப்படுவது. மேலும் ஆன்மாவானது சடப்பொருளுக்கு உரிய நிபந்தனைகளாற் கட்டுப்படுத்தப்பட்டதல்ல. அது தனது நீர்மையிலே சுதந்திரமுடையது; எல்லையற்றது; பரிசுத்தமானது; பூரணத்துவமுடையது. ஏதோ ஒரு காரணத்தினாலே சடத்தோடு கட்டுப்பட்டுத் தன்னைச் சடமென நினைக்கின்றது.

சுதந்திரமும் பூரணத்துவமும் உடைய பரிசுத்த ஆன்மா சடத்தினால் ஏன் அடிமைப்படுத்தப்பட்டிருக்கிறதென்பது அடுத்த வினாவாகும். பரிபூரணனாகிய ஆன்மா தான் குறைவுடையவன் என்னும் நம்பிக்கை கொண்டு என்ன காரணம்பற்றி மயக்குற்றது? இத்தகைய வினா இருத்தல் கூடாதென்று சொல்லி இந்துக்கள் இவ் வினாவைக் கடத்திவிடுகிறார்களெனப் பிறர் சொல்லக் கேள்விப்படுகின்றோம். ஒருசார் பூரணத்துவத்தை அடைந்த ஒரு சில சீவர்களைக் காட்டிப் பெரிய சாஸ்திரீகமாகிய வார்த்தைகளை உபயோகித்துச் சில தத்துவசாஸ்திரிகள் இதற்கு மறுமொழி கூற முயலுகின்றனர். பெயரிட்டுரைப்பது விளக்குவதாகாது. வினா முன்னிருந்தபடியே இருக்கிறது.

பரிபூரணம் எங்ஙனம் தனது நிலைமையிலிருந்து குறைவுபடுதல் கூடும்? பரிசுத்தம் பொருந்திய உயர் தனிப்பொருள் தனது நீர்மையிலே அணுவள வேனும் வேறுபடுவது எங்ஙனம்ஆகும்? இந்த இயல்பாகவே உண்மை கூறுபவன். ஆதலினாலே விதண்டா வாதத்தினுட் புகாது வினாவை ஆண்மையோடு முன் னிட்டு "நான் அறியேன்" என்று விடை கூறுகிறான். "பரிபூரணனாகிய ஆன்மா சடத்தினாற் கட்டுப்பட்டுத் தன்னைக் குறைவுடையவனாகக் கருதுவது எவ்வண்ணம் எய்தியதோ, யான் அறியேன்" என்கின்றான். அங்ஙனமாயினும் காரியத்தளவிலே உண்மை மாறு படாதிருக்கிறது. ஒவ்வொருவரும் தமது உள்ளத்து உணர்விலே தம்மை உடலாகக் கருதுகின்றனர். ஒரு வன் தன்னை உடலாகக் கருதுவது எதனால் எய்தி யது என்பதை விளக்குவதற்கு இந்த முயலவில்லை. இது ஆண்டவனுடைய சித்தத்தினால் எய்தியது என்று சொல்லுவது மறுமொழியாகாது. இந்த "நானறியேன்" என்று சொல்லுவதிலும் பார்க்க இது சிறந்த விளக்கம் ஆகாது.

மனிதனுடைய ஆன்மா நித்தியமானது; அமிர் தத்துவமுடையது; பூரணமானது; எல்லையற்றது. மரணமென்பது ஒருடலிலிருந்து மற்றொருடலுக்கு இடம் பெயரும் நிகழ்ச்சியேயாம். கழிந்துபோன வினைகளினாலே நிகழ்காலம் நிச்சயிக்கப்பட்டது. நிகழ் காலத்தினாலே எதிர்காலம் நிச்சயிக்கப்படும். பிறந் தும் இறந்தும் ஆன்மாவானது உயர்வினையும் தாழ் வினையும் எய்துகின்றது. இப்பொழுது மற்றொரு வினா

எழுகின்றது. பெரும் புயற்காற்றிலே ஒரு சிறிய தோணியிலே பிரயாணஞ்செய்புமொருவன்ஒருகணத்திலே நுரையையுடைய திரையினது உச்சியை யடைந்தும், மற்றொரு கணத்திலே ஆழ்ந்த அகழியினுள்ளே வீசப்பட்டும், நல்வினை தீவினையாகிய கருமங்களினது வலிமையினாலே உந்தப்பட்டும் ஒன்றினாலும் மாறுபடாத காரண காரியத் தொடர்பாகிய தலைபுரண்டோடுகிறநீரோட்டத்திலேஅக்கப்பாடுஉறுகின்றானா? பின்னு மிவன், அகப்பட்ட அனைத்தினையும் அரைத்துத் தள்ளும் காரண காரியத் தொடர்பு என்னும் சக்கரத்தினுள்ளே அகப்பட்ட ஒரு விட்டிற் பறவையைப் போன்றவனா? நியதி என்னும் சக்கரமானது விதவையினுடைய கண்ணீரையும் அநாதைகளுடைய அழுகையையும் பொருட் படுத்தாது யாவற்றினையும் நெரித்துக்கொண்டு உருண்டு செல்லுகிறது. இதனை நினைக்கும்பொழுது நெஞ்சம் பதைக்கின்றது. ஆயினும் இதுவே இயற்கையின் விதி. அப்படியாயின் புகலிடம் ஒன்று இல்லையா? தப்புவதற்கு ஒரு வழி இல்லையா? மிகுந்த துன்பத்தினாலே வருந்திய இருதயத்தின் அடியிலிருந்து இத்தகைய வினாவினொலியானது எழுகின்றது. அது இரக்கமுள்ள ஆண்டவனுடைய சிங்காதனத்தைச் சேருதலும் அங்கிருந்து நம்பிக்கையையும் ஆறுதலையுந் தருகின்ற சொற்கள் ஒரு வேத ரிஷியினிடத்திலிருந்து எழுந்தன. அந்த ரிஷி உலகத்தின் முன்னிலையில் நின்று பெரிய தொனியிலே பின்வரும் சந்தோஷச் செய்தியைச் சொல்லினார். "அமிர்தத்துவமாகிய ஆனந்தத்

துக்கு உரிய மக்களே, கேட்பீர்களாக. உயர்ந்த புவனங்களிலே வசிப்பவர்களே, நீங்களும் கேட்பீர்களாக. இருள் அனைத்தினுக்கும், மயக்கம் அனைத்தினுக்கும் அப்பாலாக விருக்கின்ற பழையோனை நான் கண்டு கொண்டேன். அவனை அறிவதனால் மாத்திரமே மீட்டும் மீட்டும் மரணமடையாது காப்பாற்றப்படுவீர்கள்.'' அமிர்தத்துவமாகிய ஆனந்தத்தினது மக்களே ''—இஃது எவ்வளவு இனிமையையும் மனத்தினுக்கு நம்பிக்கையையும் தருகின்ற பெயராக விருக்கின்றது. சகோதரர்களே, அமிர்தத்துவமாகிய ஆனந்தத்திற்கு உரியவர்களென்னும் அந்த இனிய நாமத்தினாலே நான் உங்களை அழைப்பதற்கு உத்தரவு தருவீர்களாக. நீங்கள் கடவுளுடைய மக்கள். அமிர்தத்துவமாகிய ஆனந்தத்திற்குப் பங்கு உடையவர்கள். பரிசுத்தம் பொருந்திய பூரணர்கள். உலகிலே தெய்வங்களாக விருக்கின்ற நீங்கள், பாவிகளா? ஒரு மனிதனை அவ்வண்ணம் அழைப்பது பாவமாகும். மனித இயற்கைக்கு அஃது ஒரு நிலையற்ற பழிச்சொல்லாகும். ஓ! சிங்கங்களே! எழுந்திருப்பீர்களாக. நீங்கள் ஆடுகள் என்னும் மயக்கத்தைத் தொலைத்து விடுவீர்களாக. நீங்கள் நித்தியத்துவமுடைய ஆத்துமாக்கள். சுதந்திரமுள்ள சித்துருவங்கள். ஆசிர்வதிக்கப்பட்டவர்கள். நித்தியர்கள். நீங்கள் சடப்பொருளல்ல. நீங்கள் உடலங்களல்ல. சடம் உங்களுக்கு அடிமை. நீங்கள் சடத்துக்கு அடிமையல்ல

அஞ்சத்தக்க மன்னிப்பில்லாத விதிகளின் தொகுதியை வேதங்கள் கூறவில்லை; காரண காரியத் தொடர்ச்சியாகிய முடிவில்லாத சிறை வீட்டினைக் கூறவில்லை; இந்த விதிகளுக்குத் தலையாகிச் சடம், இயக்கம் என்னும் இரண்டிலும் ஒவ்வோர் அணுவினூடாகவும் ஒருவன் இருக்கின்றானென வேதங்கள் கூறுகின்றன. "அவனுடைய கட்டளையினாலே காற்று வீசுகின்றது; அக்கினி எரிகின்றது; மேகங்கள் மழையைப் பொழிகின்றன. பூவுலகின்மீது மரணம் இயங்குகின்றது." அவனுடைய தன்மைதானென்ன? அவன் சர்வ வியாபி, பரிசுத்தன், உருவமற்றவன், எல்லாம் வல்லவன், பூரண இரக்கமுள்ளவன். "நீ எமது தந்தை, நீ எமது தாய், எமது அன்புக்குரிய நண்பனும் நீயே, எல்லா வலிமைக்கும் உற்பத்தி நீயே, எங்களுக்கு வலிமையைத் தந்தருளுவாயாக; பிரபஞ்சத்தினுடைய பாரமனைத்தினையும் தாங்குபவன் நீயே, இந்த வாழ்க்கையின் சிறிய பாரத்தினைத் தாங்குவதற்கு எனக்கு உதவிபுரிந் தருள்வாயாக" என்று இவ்வாறு வேதரிஷிகள் பாடினார்கள். அவனை வழிபடுவது எப்படி? அன்பினால். இவ்வுலகத்திலும் மறுமையிலும் உள்ள அனைத்தினும் பார்க்க மிக அரிய பெரிய அன்பனாக அவனை வழிபடுதல் வேண்டும். வேதங்களிலே கூறப்பட்ட அன்புமார்க்கம் இது. இம்மார்க்கத்தினைக் கடவுளுடைய திருவவதாரமாக இந்துக்கள் கொள்ளுகிற ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா எவ்வாறு விருத்திசெய்து போதித்திருக்கிறார் என்பதனைப் பார்ப்போமாக.

"நீரிலே வளர்ந்தும், நீரினால் நனைக்கப்படாத தாமரை இலையினைப்போல உலகத்திலே மனிதன் வாழவேண்டும்," என அவர் போதித்திருக்கிறார். ஆண்டவனுக்கு இதயத்தைத் தந்து கைகளினாலே பணியியற்றிக்கொண்டு மனிதன் உலகிலே வாழ வேண்டும்.

இம்மையிலோ மறுமையிலோ பிரதியுபகாரத்தைக் கருதி ஆண்டவனிடத்து அன்புசெலுத்துவது நன்று. ஆயினும் பிரதியுபகாரத்தை வேண்டாது அன்பின்பொருட்டாக அன்புசெலுத்துவது அதனினும் நன்று. "ஆண்டவனே! எனக்குச் செல்வம் வேண்டாம், புத்திரர் வேண்டாம், கல்வி வேண்டாம், தேவரீருக்குச் சித்தமாயின் நான் பலமுறை பிறப்பதற்கும் ஆயத்தமாயிருக்கிறேன். பிரதியுபகாரத்தை வேண்டாது சுயநலமற்ற அன்பின்பொருட்டுத் தேவரீரிடத்து அன்புசெலுத்தும் வரத்தை அடியேனுக்குத் தந்தருளுவீராக. கிருஷ்ணனுடைய சிஷ்யர்களில் ஒருவராகி அக்காலத்திலே இந்தியாவுக்குச் சக்கரவர்த்தியாயிருந்த யுதிஷ்டிரர் பகைவர்களாலே தமது ராஜ்யத்தினின்றும் துரத்தப்பட்டுத் தமது மனைவியாரோடு இமயமலைச் சாரலிலுள்ள ஒரு வனத்திலே வசித்துவரும் நாளிலே ஒருநாள் ராஜபத்தினி அவரைநோக்கி "மக்களுள்ளே ஒழுக்கத்தினாற்சிறந்த நீர் இத்தனைத் துன்பங்களை அநுபவிக்க வேண்டியது ஏனோ?" வென வினவினார். யுதிஷ்டிரர் அதற்கு மறுமொழியாகப் பின்வருமாறு சொல்லுவாராயினர். "பாராய் என் இராணியே, இதோ தோன்றுகின்ற

இமயமலை இருக்கிறதே, அது எவ்வளவு பெருமையும் அழகும் உடையது! நான் அதன்மீது அன்பு பாராட்டுகின்றேன். அது எனக்கு ஒன்றினையும் தரவில்லை. ஆயினும் உயர்வும் அழகும் பொருந்திய பொருளின்மீது அன்புசெலுத்துவது எனக்கு இயல்பு. ஆதலால் அதன்மீது அன்புபாராட்டுகின்றேன். அவ்வண்ணமே நான் ஆண்டவன்மீதும் அன்பு பாராட்டுகின்றேன். அவர் எல்லா அழகினுக்கும் உற்பத்தியானவர். எல்லா நலனும் அவரிடத்தே உள்ளன. அன்பு பாராட்டத் தக்க பொருள் அவரே. அவர்மீது அன்புபாராட்டுவது எனது இயற்கை. ஆதலால் நான் அவ்வண்ணம் செய்கிறேன். நான் அவரிடம் யாதொன்றினையும் விரும்பி வேண்டுதல் செய்யவில்லை. எங்கு வேண்டுமாயினும் அவர் என்னை வைக்கட்டும். அன்பின் பொருட்டு நான் அவர்பால் அன்புசெய்ய வேண்டும். அன்பிலே வாணிகம் செய்வது எனக்கு முடியாத காரியம். ஆத்துமா தெய்வத்துவமுடையதெனவும், சடத்தினுல் கட்டுண்டு கிடக்கிறதெனவும் வேதங்கள் சொல்லுகின்றன. இந்தக்கட்டு அகன்று போகும் பொழுது பூரணத்துவமானது அடையப்படும். இதுவே முத்தியெனப்படுவது. மாசு படிந்த பந்தத்தினின்று நீங்குவது முத்தி; நோய் மரணங்களினின்று விடுதலை யடைவது முத்தி.

இந்தப்பந்தம் ஆண்டவனுடைய இரக்கத்தினுல் மாத்திரமே அகன்று செல்லுவது. இந்த இரக்கம் பரிசுத்தவான்களை அடையும். ஆண்டவனுடைய

இரக்கத்தைப் பெறுவதற்குப் பரிசுத்த வாழ்க்கை இன்றியமையாதது. இந்த இரக்கம் எவ்வண்ணம் தொழில் புரிகின்றது? பரிசுத்தவான்களுக்கு ஆண்டவன் தன்னைத் தானே வெளிப்படுத்துகின்முன். மாசற்ற பரிசுத்தவான்கள் இந்த சிவியத்திற்முனே கடவுளைக் காண்கின்முர்கள். அப்பொழுது சிந்தையின் கோணல்களெல்லாம்செம்மையாகின்றன. ஐயங்களெல்லாம் அகன்றுவிடுகின்றன. அஞ்சத்தக்க கருமபந்தத்தினின்றும் மனிதன் விடுவிக்கப்படுகின்முன். இதுவே இந்து சமயத்தின் அடிப்படையாகிய நடுக்கருத்து. வெறும் வார்த்தைகளையும் கொள்கைகளையும் மாத்திரம் கேட்டு உயிர்வாழ்க்கை நடத்துவதற்கு இந்து விரும்புவதில்லை. சாதாரண புலன்களோடு கூடிய வாழ்க்கைக்கு அப்பால் வேறு வாழ்க்கைகளிருந்தால், அவற்றை நேரிலே காணவேண்டுமென்று இந்து விரும்புகிமுன். சடப்பொருளல்லாத சித்து ஒன்று உளதாயின், எல்லாரிடத்திலும் இரக்கமுள்ள ஓர் ஆத்துமா உளதாயின், அதனை நேரிலே அடைய வேண்டுமென்று அவன் நாடுகிமுன்.

எல்லா ஐயங்களையும் அழிக்கின்ற ஆண்டவனைக் கட்டாயமாகப் பார்க்கவேண்டுமென்று அவன் கருதுகிமுன். ஆத்துமாவைப்பற்றியும், கடவுளைப்பற்றியும் இந்திய ஞானி சொல்லுகிற பெரிய சான்று எதுவெனில், 'நான் ஆன்மாவைக் கண்டேன், நான் கடவுளைக் கண்டேன்' என்பது. இதுவேபூரணத்துவத்தை அடைவதற்கு இன்றியமையாத வழி. குறித்த கொள்கைகளை நம்புவதற்குச் செய்கின்ற முயற்சிகளி

லே இந்து சமயம் தங்கியிருக்கவில்லை. உண்மையை நேரிலே சாக்ஷாத்காரமாகக் கண்டு அதுவே தானய் நிற்கின்ற நிலையே வேண்டப்படுவது.

இடைவிடாத முயற்சியினலே பூரணத்துவத்தை யடைந்து, தெய்வீகமாகி, ஆண்டவனைக் கண்டடைவதே இந்துக்களது மார்க்கத்தின் முழு நோக்கமாகும். இங்ஙனம் கடவுளைக் கண்டடைந்து மோக்ஷ ராஜ்யத்திலுள்ள பரிபூரணராகிய தந்தையைப் போலத் தாமும் பூரணத்துவத்தை அடைவது இந்து சமயத்தின் கருத்தாகும்.

ஒரு மனிதன் பூரணத்துவத்தை அடைந்தபிறகு எதுவாகின்ருன்? அவன் எல்லையற்ற ஆனந்தவாழ்க்கையை வாழுகின்ருன்; எல்லையற்ற பரிபூரணமாகிய ஆனந்தத்தை அநுபவிக்கின்ருன்; மனிதனுக்கு உவகையைத் தரத்தக்க ஒரே பொருளாகிய கடவுளை அடைந்து ஆனந்தத்தை அனுபவிக்கின்ருன்.

இதுவரையில் எல்லா இந்துக்களும் ஒரேகருத்துடையவர்கள். இந்தியாவிலுள்ள எல்லாமத வகுப்பினருக்கும் இவை பொதுவாகிய முடிபுகள். அங்ஙனமாயினும் பூரணத்துவமானது ஒன்ருகவிருத்தல் வேண்டும்; இரண்டு மூன்ருக விருத்தல் கூடாது. அது குணங்களற்றதா யிருக்கவேண்டும். அந்நிலையை யடைந்த உயிர் தனி உயிராக இருத்தல் கூடாது. ஆதலினலே, ஆன்மாவானது பரிபூரண நிலையை அடையும்பொழுது பிரம்மத்திேைடு ஒன்ருகித் தனது இயற்கையும், நிலையும், உண்மையும் ஆண்டவனேடு ஒருமித்து நிற்கச் சச்சிதாநந்தமாகத் தன்

னைக் காணுகின்றது. தனக்குரிய நிலையழிந்து கல்லைப்போலும் கட்டையைப்போலும் ஆகின்றது என ஒரு சாரார் பலமுறையும் சொல்லக் கேள்வியுற்றிருக்கிறோம்.

"வாட்புண்பட்ட வடுவழிகில்லார் நாட்புண் கண்டு நகைப்பினும் நகைப்பர்."

"அது அத்தன்மையது அல்ல," என நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். இந்தச் சிறிய உடலத்தின் உணர்வை அனுபவிப்பது இன்பம் எனக் கொள்ளப்படுமாயின் இரண்டு உடலங்களின் உணர்வினை அநுபவிப்பது அதிக உவகையைத் தருவதாகும். உடலங்களின் தொகை அதிகப்பட அவற்றில் இருந்து எழும் உணர்வு அளவினுற் பெருகும். எவ்விடத்திலும் பரந்து நிற்கின்ற உணர்வு கைகூடிய உடனே இன்பத்தின் எல்லை எய்தப்பட்டதாகும்.

எல்லையற்று எங்கும் நிறைந்திருக்கின்ற தன்மயத்தை அடைவதற்குத் துன்பம் கவலையோடு கூடிய சிறைச் சாலைபோன்ற இந்தச் சிறிய தேகபுத்தி ஒழிந்துவிடவேண்டும். நான் உயிரினேடு ஒன்றுபட்டிருக்கும்பொழுது மாத்திரமே மரணம் ஒழிந்து போகும். உவகையோடு ஒன்றித்து நிற்கும்பொழுது கவலையொழிந்து போகும். அறிவோடு ஒன்றித்து நிற்கும்பொழுது தவறு அனைத்தும் போய்விடும். இதுவே சாஸ்திரீகமான முடிபு. சடம் தனித்திருத்தல் மயக்க உணர்வாகுமென விஞ்ஞான சாஸ்திரம் தீர்ப்பிடுகின்றது. இடையீடில்லாத சடப் பொருளாகிய சமுத்திரத்திலே தொடர்ந்து வேறுபட்டுக்

கொண்டிருக்கின்ற சிறிய உருவம் எனது உடல மாகும். இனி எனது மற்றொருபாகமாகிய ஆன் மாவும் இரண்டல்லாத பொருளென்பது ஆராய்ந்து கண்டோரது முடிபு.

ஒன்ருந் தன்மையைக் காணுவதே விஞ்ஞான சாஸ்திரத்தின் நோக்கம். பூரணமாகிய ஏகத்துவத் தைக் கண்டடைந்த உடனே விஞ்ஞான சாஸ்திரம் தனது எல்லையை அடைந்து மேற் செல்லாது நின்று விடும். எந்த ஒரு பொருளிலிருந்து மற்றெல்லாப் பொருள்களும் ஆக்கப்படுகின்றனவோ அதனைக் கண்டுபிடித்த பின்னர் இரசாயன சாஸ்திரம் முன் னேற்ற மடைவதை யொழித்து நின்றுவிடும். எல்லா வலிமைகளும் தோற்றுவதற்கு மூலமாக விருக்கின்ற ஒரு வலிமையைக் கண்டறிந்த வுடனே பௌதிக சாஸ்திரம் தனது தொழிலை முடித்ததாகி நிலை பெற்றுவிடும். மரணமே காட்சியாக விருக்கின்ற பிரபஞ்சத்திலே நிலை பெற்ற ஒரே உயிராக வுள்ள ஒருவனைக் கண்டறிந்த உடனே சமய ஆராய்ச்சியும் பூரணப்பட்டுவிடும். அவ்வொருவனே என்றும் மாறு தலடைகின்ற உலகத்திலே மாறுபாடின்றி நிலை பெற்ற ஆதாரமா யிருப்பவன். எல்லா ஆன்மாக் களும் தோற்றத்தளவில் வேறு வேருகக் காணப்படு வதற்கு இடமாக நின்ற ஒரே ஆத்மா அவனே. பன்மை இருமை ஆகிய இவற்றினைக் கடந்து முடிவா கிய ஒருமை அடையப் படுகின்றது. சமயம் அதற்கு அப்பாற் செல்லமாட்டாது. இதுவே விஞ்ஞான சாஸ்திரத்திற்கும் இலக்கு.

காலாந்தரத்திலே எல்லா சாஸ்திரங்களும் இந்த முடிபுக்கே வரவேண்டியன. படைப்பு அல்ல, ஒடுங்கியது தோற்றுதல் என்னுங் கொள்கையே இக்காலம் விஞ்ஞான சாஸ்திரங்களிலே வழங்கப்படுவது. தனது நெஞ்சத்திலே நீண்ட காலமாகப் போற்றிவந்த கொள்கையானது நிறைந்த ஆற்றலுள்ள மொழிகளினலே விஞ்ஞான சாஸ்திர முடிபுகளோடு தெளிவு படுத்தப் படப் போவதைக் கண்டு இந்துவானவன் சந்தோஷ மடைகின்ருன். தத்துவஞானத்தின் உயரிடங்களிலேயிருந்து பேதை மக்களின் சமயநிலையை நாடிக் கீழ்ப் படிகளுக்கு வருவோமாக. இந்தியாவிலே பலதெய்வ வணக்கம் இல்லை என்பதைத் தொடக்கத்திலேயே நான் உங்களுக்குச் சொல்லி விடுகின்றேன். ஒவ்வொரு தேவாலயத்திலும் வந்து வழிபடுவோர் அங்குள்ள உருவங்களை நோக்கி அவற்றுக்குச் சர்வ வியாபக முதலாகக் கடவுளுக்குள்ள எல்லாக் குணங்களையும் ஏற்றி வழிபாடியற்றுவதை இன்னும் காணலாகும். இது பலதெய்வ வணக்கமாகாது. "சிறப்புத் தெய்வ வணக்கம்" என்னும் சொல்லும் இங்குப் பொருந்தாது. ரோஜா மலருக்கு எப்பேரிட்டழைப்பினும் அது தனது நறுமணத்தையே தரும். பெயரிட்டு அழைத்தல் தன்னளவிலே விளக்கமாகாது.

நான் சிறுவனயிருக்கும்பொழுது ஒரு கிறிஸ்தவப் பாதிரியார் இந்தியாவிலே ஒரு ஜனக் கூட்டத்திற்குப் பிரசங்கஞ் செய்தது இப்பொழுது எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது. பல ருசிகரமான விஷயங்களோடு அவர் பின் வரும் விஷயத்தையும் கூறினர்:

"உங்களுடைய விக்கிரகத்திற்கு இந்தத் தடியினால் ஓர் அடி அடித்தால் அது என்ன செய்யும்?" என்றார். கேட்டு நின்றோரில் ஒருவர் பாதிரியாரை நோக்கி, "உன்னுடைய தேவனை நான் நிந்தித்தால் அவர் என்ன செய்வார்?" என்று துடுக்காகக் கேட்டார். "நீ இறக்கும்பொழுது தண்டிக்கப்படுவாய்," எனப் பிரசங்கியார் கூறினார். இந்துவும் மாறுத்தரமாக, "நீ இறக்கும்பொழுது எனது விக்கிரகமும் உன்னைத் தண்டிக்கு"மென்று கூறினார்.

மரத்தினைப் பழத்தினால் அறியலாம். விக்கிரகாராதனைக்காரரென்று சொல்லப்படுவோருள்ளோ, ஒழுக்கத்திலும், ஆத்மீக சக்தியிலும், அன்பிலும் தமக்கொருவர் இணையில்லாதாரை நான் கண்டுள்ளேன். "பாவத்திலிருந்து பரிசுத்தம் பிறத்தல் கூடுமா?" என்னும் எண்ணம் என் மனத்தில் எழுந்தது.

மூடக்கொள்கை மனிதனுக்குப் பெரிய சத்திராதி; பிடிவாதம் அதனினும் இழிந்தது. கிறிஸ்தவன் எதற்காக ஆலயத்திற்குப் போகின்றான்? சிலுவை என் பரிசுத்தமானது? பிரார்த்தனை செய்யும்பொழுது முகத்தை ஏன் வானத்தை நோக்கித் திருப்புதல் வேண்டும்? கத்தோலிக் தேவாலயங்களிலே எத்தனையோ உருவங்கள் எதற்காக விருக்கின்றன? புரட்டஸ்தாந்து கிறிஸ்தவர்கள் பிரார்த்தனை செய்யும்பொழுது அவர்களுடைய உள்ளத்திலே எத்தனையோ உருவங்கள் இருப்பது என்? என்னருமைச் சகோதரர்களே, மூச்சு விடாமல் உயிர் வாழ்தல்

கூடாது. அதுபோலவே மானத உருவங்களில்லாமல் எதனையும் பற்றி நினைத்தல் கூடாது. சம்போக விதியினாலே சடப்பொருள் உருவமானது மானத உருவத்தை உண்டாக்குகிறது. மானத உருவம் சடப்பொருள் உருவத்தைப்பற்றி நிற்கிறது. ஆகையினாலேதான் இந்து வழிபாடியற்றும்பொழுது புறத்தேயுள்ள உருவத்தை உபயோகப்படுத்துகிறான். எந்தத்தெய்வத்துக்கு வழிபாடு செய்கிறானோ அதனை மனத்திலே அமைத்துக்கொள்ளுவதற்குப் புறவுருவம் உதவியாகின்றது. உருவம் தெய்வமல்லவென்றும் சர்வவியாபியல்லவென்றும் நீ அறிவது போலவே அவனும் அறிந்திருக்கின்றான். உலகத்திலுள்ளோருக்குச் சர்வவியாபி என்பது என்ன கருத்தினைத் தருகின்றது? அஃது ஒரு வெறுஞ்சொல், ஒரு குறியீடு. ஆண்டவனுக்குப் பரப்பு உண்டா? இல்லாவிடின் சர்வவியாபகன் என்னும் மொழியைச் சொல்லுமிடத்துப் பரந்திருக்கின்ற ஆகாயம், வெறுவெளி என்னும் இவற்றினையே கருதுகிறோம்.

நமது மனத்தின் அமைப்பினாலே நாம் எல்லையற்ற பொருளை நினைக்கின்ற நினைவுகள் நீல ஆகாயத்தின் உருவத்தையும், கடலின் வடிவத்தையும் தம்மோடு உடன்கொண்டுவருகின்றன. இவ்வண்ணமே, தேவாலயம், மசூதி, சிலுவை என்னும் இவற்றின் உருவங்கள் பரிசுத்தத்தைப்பற்றிய எண்ணத்தோடு இயற்கையாகவே தொடர்புடையன. இந்துக்கள் பரிசுத்தம், தூய்மை, உண்மை, சர்வவியாபகம் என்ற இத்தகைய எண்ணங்களோடு வேறுவேறாகிய

உருவபேதங்களை ஒன்றுபடுத்தி யிருக்கின்றனர். சிலர் தமது வாழ்க்கை முழுவதினையும் ஓராலயத்தி லுள்ள விக்கிரகத்திற்கே செலுத்தி, அந்நிலையினின் றும் உயர்வடையாது இருக்கின்றனர். ஏனெனில், சில கொள்கைகளை ஒத்துக்கொள்ளுவதும் தம்மினத் தாருக்கு நலம்புரிவதுமே அவர்களால் சமயமென்று கொள்ளப்படுகின்றது. இந்துக்களின் சமயம் முற் றும் சாக்ஷாத்காரத்தையே அடிப்படையாகக்கொண் டது. தெய்வத்தை நேரிற்கண்டு உணர்வதனால் மனி தன் தெய்வத்துவத்தை அடைகின்றான். விக்கிரகங் களும், கோயில்களும், ஆலயங்களும், நூல்களும் ஆத்மீக இளம்பருவத்திலே அவனுக்கு ஆதாரமாக விருக்கின்றன. ஆனால், அவன் மேலும்மேலும் முன் னேற்ற மடையவேண்டியவன்.

சடவணக்கமாகிய வெளிவணக்கம் ஆகக் கீழா கிய நிலை. உயர்வடைய முயன்றுசெய்யும் மானசிக வணக்கம் அடுத்தபடி. ஆண்டவனை நேரிற் கண்டு அடைவதுஆக உயர்ந்தநிலை. விக்கிரகத்தின் முன்னே முழந்தாட்படியிட்டு நிற்கின்ற மனிதன் ஆண்டவ னையே வழிபடுகின்றான். "கதிரவனுடைய பிரகாசம் அவனுக்கு இணையாகமாட்டாது. சந்திரனும் அவ னுக்கு இணையில்லை. நட்சத்திரங்களும் இணையாக மாட்டா. மின்னல் அவனது தோற்றத்தைக் காட்ட மாட்டாது. நாம் அக்கினி என்று சொல்லுவதும் அவனைக் காட்டமாட்டாது. அவன்மூலமாக அவை யனைத்தும் ஒளி பரப்புகின்றன," எனக்கூறி வழிபடு கின்றான். ஆயினுமவன் பிறருடைய விக்கிரகத்தை

சிந்திப்பதில்லை. பிறருடைய வழிபாட்டைப் பாவமென்று சொல்லுவதில்லை. அவ்வழிபாட்டினிடத்தே வாழ்க்கைக்குவேண்டிய ஒருபடியை அவன் காணுகின்றான். "குழந்தை மனிதனுக்குத் தந்தை." குழந்தைப்பருவம் பாவமுடையதென்றாவது, வாலிபப்பருவம் பாவமுடையதென்றாவது சொல்லுவது ஒரு கிழவனுக்குச் சரியாகுமா?

உருவத்தின் உதவியைக்கொண்டு மனிதனானவன் தனக்கு உரிமையாகிய தெய்வத்தன்மையை அடைதல் கூடுமாயின் அதனைப் பாவமென்று சொல்லலாமா? அந்தப்படியைக் கடந்தபின்னர் அதனைப் பிழையென்று சொல்லலாமா? மனிதன் தப்பிதத்திலிருந்து உண்மைக்குச் செல்லுவதில்லை. கீழான உண்மையிலிருந்து மேலான உண்மைக்குச் செல்லுகிறானென்பதே இந்துவின் கொள்கை. மிகக் குறைந்த பூத வணக்கத்திலிருந்து அதியுயர்ந்த அத்வைத வாதம் வரையும் உள்ள எல்லாச்சமயங்களும் எல்லையற்ற அகண்டத்தினை மனிதனுடைய ஆத்மா பற்றுவதற்குச் செய்கின்ற முயற்சிகளேயாம். பிறப்பு, சம்பந்தம் என்னும் இவற்றினாலே வேறு வேறாகிய மார்க்கங்கள் நிச்சயிக்கப்பட்டன. முன்னேற்றமடையும்மார்க்கத்திலே இவை ஒவ்வொன்றும் ஒவ்வொருபடியாக அமைந்துள்ளன. ஒவ்வொரு ஆன்மாவும் மேலும் மேலும் உயர்ந்து செல்லுகின்ற இளங்கழுகுக்குச் சமமாகும். உயரச் செல்லச்செல்ல மேலும் மேலும்பலமடைந்து ஈற்றிலே மகத்துவம் பொருந்திய சூரியனை அடையும்.

வேறுபாட்டில் ஒற்றுமைக் காணுவது இயற்கையிற் பொருந்திய அமைப்பு. இந்து இதைக் கண்டறிந்திருக்கிறான். மற்ற சமயங்களெல்லாம் சில குறிப்பிட்ட கொள்கைகளை நிறுவி அவற்றை ஏற்றுக் கொள்ளும்படி ஜனசங்கத்தை நெருக்குகின்றன. ஜனசங்கத்தின் முன்னிலையிலே ஜாக்,ஜான், ஹென்றி என்னும் அனைவருக்கும் பொதுவாக ஒரே அங்கியைக் கொடுப்போமாயின் அவ்வங்கி ஜானுக்கோ ஹென்றிக்கோ பொருந்தாது போதல் கூடும். அப்பொழுது அவர்கள் தமது உடலை மூடுவதற்கு அங்கியில்லாது செல்ல வேண்டியதுதான். பாரமார்த்திக நிலையிலுள்ள ப்ரம்பொருள் வியவகார நிலையிலுள்ள பொருள்களின் மூலமாகவே அடையப்படுவது என இந்துக்கள் கண்டிருக்கிறார்கள். உருவங்களும், சிலுவைகளும், இளம்பிறைகளும் குறியீடுகள் மாத்திரமாக இருக்கின்றன. ஆத்மீக எண்ணங்களைத் தொங்கவிடுவதற்குக் கொழுக்கள் போன்றிருக்கின்றன. இத்தகைய உதவி அனைவருக்கும் வேண்டப்படுவதல்ல. ஆயினும் அதனை வேண்டாதவர் வேண்டி நிற்போரை நோக்கி அவர் செல்லும் வழி தவறு எனக் கூறுவது முறையாகாது. மேலும் இவை இந்துசமயத்திற்கு இன்றியமையாதனவுமல்ல.

இவ்விடத்தில் ஒன்று சொல்ல விரும்புகிறேன். இந்தியாவிலே விக்கிரக வணக்கமென்பது அஞ்சப்படுவதொன்றல்ல. ஏனைய விடங்களிலிருந்ததுபோல அது விலைமகளிருக்கு உற்பத்திஸ்தானமல்ல. விருத்தியடையாத மனங்கள் உயர்ந்த ஆத்மீக உண்மை

களைப்பற்றும் வண்ணம் செய்கின்ற முயற்சி அது வாகும். இந்துக்களிடத்திலே குற்றமிருக்கலாம். அவர்கள் விதிக்குப் புறநடையாக ஒழுகலாம். ஆயினும் ஒன்றுமாத்திரம் உண்மை. அவர்கள் தங்களது சரீரத்தைத் துன்புறுத்துவதேயன்றித் தமது அயலாருடைய கழுத்தை ஒருபோதும் வெட்டமாட்டார்கள். மதப்பிடிவாதமுள்ள இந்து தீமூட்டித் தன்னையே தகித்தல் செய்வான். பிறரைத் தகிப்பதற்கு (இடைக்காலத்தில் ஐரோப்பாவிலிருந்த மதவெறி பிடித்த மக்கள் மூட்டிய) இன்குவிஸிஷன் (Inquisition) போன்ற தீயை இந்து மூட்டுவதில்லை. மாந்திரீகக் கிழவிகளை எரித்த குற்றம் கிறிஸ்தவ சமயத்தைச் சாராத தன்மைபோல இத்தகைய நிகழ்ச்சிகளும் பிற சமயங்களை வழுப்படுத்த மாட்டா.

உலகிலுள்ள சமயபேதமனைத்தும் பல்வேறு வகுப்பினராகிய ஆடவரும் பெண்டிரும் வேறுவேறு வழிகளின் மூலமாக ஒரே எல்லையை அடையும் பொருட்டு முயலுகின்ற முயற்சிபோல்வன என்பது இந்துவின் அபிப்பிராயம். சடத்தோடு சம்பந்தப்பட்ட மனிதனிலிருந்து தெய்வத்தை உருப்படுத்துவதே சமயங்களின் இலக்கு. எல்லோருக்கும் உண்ணின்று உணர்த்துபவர் ஒரே கடவுளே. அப்படியாயின் மறுதலைப்பட்ட கொள்கைகள் அநேகம் இருப்பது என்? அவை தோற்ற மாத்திரையாக உள்ளன என இந்து சொல்லுகிறான். ஒரே உண்மை வெவ்வேறு நிலைகளால் ஏற்பட்ட பல வேறு

இயற்கைகளுக்கு ஏற்புடைத்தாகி நிற்பதனுல் வேறு பாடுகள் பலவாயின.

வெவ்வேறு வருணங்களையுடைய கண்ணுடி களின் மூலமாக ஒரே ஒளி வருகிறது. பொருத்த முறுவதற்குச் சிறுச்சிறு வேறுபாடுகள் இன்றியமை யாதன. எல்லாப்பொருள்களிலும் உண்ணின்ற நிலையிலே ஒரே உண்மை ஆணை செலுத்துகின்றது. "முத்துமாலையி னூடே கோர்த்து நிற்கின்ற நூல் போல எவ்வெவ்விடத்து அதியுயர்ந்த பரிசுத்தமும், அதியுயர்ந்த வல்லமையும் தோற்றி மக்களை உயர்த் திப்பரிசுத்தப் படுத்துகிறதோ, அவ்வவ்விடத்திலெல் லாம் நான் இருக்கின்றேன்" எனப் பகவான் தனது கிருஷ்ண அவதாரத்திலே எல்லா இந்துக்களுக்கும் சொல்லுகிருர். இதனுல் எய்திய பயன் என்ன? சமஸ்கிருத தத்துவ சாஸ்திர மனைத்தினையும் திருப் பிப் பார்த்தாலும் இந்துக்களைத்தவிர பிறர் முத் தியை அடையமாட்டார் என்னுங் கருத்தமைந்த வார்த்தை ஓரிடத்திலும் காணப்படுவதில்லை. உண் டென்று சொல்லுவாரோடு வாதித்து வெல்ல நான் சித்தமாயிருக்கிறேன். "நமது சாதிக்கும், சமயத் துக்கும் புறம்பாகப் பூரண நிலையை அடைந்த மனி தர் உளர்" என வியாஸபகவான் சொல்லுகிருர். இன்னுமொரு குறிப்பு எழுகின்றது. ஆண்டவனையே நிலயமாகக் கொண்ட தத்துவஞானத்தை உடைய வனுகிய இந்து அஞ்ஞேயவாதமாகிய பௌத்தத்தை யும் நிரீச்சுர வாதமாகிய ஜைனத்தையும் எவ்வண் ணம் நம்புதல் கூடும்? பௌத்தரும் ஜைனரும் தெய்

வத்தைச் சார்ந்து நிற்பதில்லை. மனிதனிலிருந்து தெய்வத்தை உருப்படுத்துகின்ற நீர்மையதும் எல்லாச் சமயங்களுக்கும் நிலைபேறுள்ள நடுவாகி யமைந்ததுமான உண்மையினையே இந்தச் சமயங்கள் சார்ந்து நிற்கின்றன. இவை தந்தையைக் காணவில்லை. ஆயினும் மைந்தனைக் கண்டிருக்கின்றன. மைந்தனைக் கண்டவன் தந்தையையும் கண்டவனே ஆவான்.

அன்புள்ள சகோதரர்களே ! இந்துக்களின் சமயக் கொள்கைகளைப்பற்றிய சுருக்கமான குறிப்பு இதுவாகும். இந்து தான் செய்துகொண்ட ஏற்பாடுகளையெல்லாம் நிறைவேற்றுமல் இருக்கலாம். ஆனல் உலகனைத்தினுக்கும் ஒரு சமயம் இருக்க வேண்டுமாயின் அது இடத்தினுலும் காலத்தினுலும் எல்லைப் படுத்தாததாக விருக்கவேண்டும். தான் போதிக்கின்ற தெய்வத்தைப்போல அச்சமயமும் அகண்டமாகவிருக்க வேண்டும். கதிரவன் தனது கிரணங்களை நல்லோரிடத்தும், தீயோரிடத்தும், கிருஷ்ணனை வழிபடுவோரிடத்தும், கிறிஸ்துவை வழிபடுவோரிடத்தும் ஒரே தன்மையாகப் பரப்புதல் போல, பிராமணம், பௌத்தம், கிறிஸ்தவம், முகம்மதியம் என்னும் வேறுபாடில்லாததாய் இவை அனைத்தினையும் உள்ளடக்கியதாய், விருத்தி யடைவதற்கு இன்னும் இடமுள்ளதாய், அகண்டமாகிய தன் கைகளினுலே அனைத்தினையும் தழுவிநிற்கும் அச்சமயமானது ஒரு சாராக விலங்கினத்தினின்று வேறுபடாத நாகரீகமற்ற மனிதருக்கு இடந்தந்து

மற்றொரு சாராக இவன் தெய்வமோ என மக்கள் ஐயப்படத்தக்க உயர்வுடையோருக்கும் இடந்தந்து நிற்றல் வேண்டும். மதகண்டனத்திற்கும், ஒடுங்கிய எண்ணங்களுக்கும், இடந்தராது எல்லா ஆடவரிடத்தும், பெண்டிரிடத்தும் தெய்வத்துவத்தைக்கண்டு மக்கள் தமது உண்மையாகிய தெய்வநிலையை அடைவதற்கு உதவிபுரிந்து நிற்பது அந்தச்சமயத்தின் இலக்காகும்.

அத்தகைய சமயத்தை உதவுவீர்களாயின் எல்லா மக்களும் உங்களைப் பின்பற்றிச் செல்லுவார்கள். அசோகனுடைய சபை பௌத்த மதத்தைப் பரப்பும் சபையாக இருந்தது. அக்பருடைய சபை மனை முற்றத்திலே கூடிய சபையாகும். எல்லாச் சமயங்களிலும் ஆண்டவன் இருக்கின்றான் என்னும் உண்மையை பூகோளத்தின் நாலு திசைகளுக்கும் பரப்பும் தொழில் அமெரிக்காவிற்கே உரியதாயிற்று.

இந்துக்களால் பிரமமெனவும் சொராஸ்திரியரால் அஹுரமஸ்தா எனவும் புத்தர்களால் புத்தரெனவும், யூதர்களால் யேகோவா எனவும் கிறிஸ்தவர்களால் பரமண்டலத்திலுள்ள தந்தை யெனவும் அழைக்கப்படுகின்ற தெய்வம் உங்களது மேலான எண்ணம் நிறைவேறும்படி உங்களுக்கு வலிமையைத் தருவதாக. நட்சத்திரம் கிழக்கிலே எழுந்தது; அது மேற்கு நோக்கி நேராகச்சென்றது; சில பொழுது மங்கலாகவும், சிலபொழுது பிரகாசமாகவும் சென்று உலகத்தைச் சுற்றியது. இப்பொழுது மறுபடியும் கிழக்குத் திசையிலே சம்புநதியின் கரை

யிலே முன்னையிலும் ஆயிர மடங்கு பிரகாசத்தோடு உதிக்கின்றது.

சுதந்திரத்திற்குத் தாயகமாகிய கொலம்பியாவே, நீ வாழ்க! அயலாருடைய உதிரத்திலே கையினைத் தோய்க்காது, அயலாருடைய பொருளைக் கொள்ளையடித்துச் சுருக்க வழியிலே பொருள் சம்பாதிக்க எண்ணாது, சமரசமென்னும் கொடியினைப் பற்றி நாகரீகமென்னும் சேனையின் முன்னணியிலே செல்லுவது உனக்கே யுரியதாயிற்று!



## சமய போதனையானது இந்தியாவுக்கு அத்தியாவசியகம் வேண்டப்படுவதொன்றல்ல



1893-ம் ஆண்டு செப்டம்பர்மீ 20௳ அருளிச்செய்தது.

நன்முறையாகக் குற்றங் கூறுமிடத்து அதனை ஏற்றுக்கொள்ளுவதற்குக் கிறிஸ்தவர்கள் என்றும் ஆயத்தமா யிருக்கவேண்டும். நான் சிறிது குற்றங் கூறினால், அதனை நீங்கள் பொருட்படுத்தமாட்டீர்கள் என்று நினைக்கின்றேன். கிறிஸ்தவர்களாகிய நீங்கள் அஞ்ஞானிகளுடைய ஆன்மாவை இரட்சிக்கும் பொருட்டுப் பிரசாரகர்களை அனுப்பப் பெரிதும் விரும்புகிறீர்கள். ஆனால் அஞ்ஞானிகளுடைய உடலைப் பட்டினியிலிருந்து பாதுகாப்பதற்கு நீங்கள்

ஏன் முயலுவதில்லை. இந்தியாவிலே கொடிய பஞ்சங்கள் நடந்தபொழுது, ஆயிரக்கணக்கானோர் பட்டினியினாலே இறந்தார்கள். ஆயினும் கிறிஸ்தவராகிய நீங்கள் அதற்கு ஒன்றும் செய்யவில்லை. இந்தியாமுழுவதிலும் ஆலயங்களை உண்டாக்குகிறீர்கள். ஆயினும் கிழக்கு நாடுகளிலே சமயத்துக்குப் பஞ்சமில்லை; இந்தியாவிலிருக்கின்ற இலக்ஷக்கணக்கான ஜனங்கள் உணவு கிடையாது தொண்டை காய்ந்து வருந்துகின்றார்கள். அவர்கள் அப்பத்தைக் கேட்கிறார்கள்; நாம் அவர்களுக்குக் கற்களைக் கொடுக்கின்றோம். பட்டினியால் வருந்துகிற மக்களுக்குச் சமய போதனை செய்யப்புகுவது பெரிய அவதூறு ஆகும். பசித்துக்கிடக்கின்ற மனிதனுக்குத் தத்துவஞானம் போதிக்கப்புகுவது அவனை நிந்திப்பதாகும். இந்தியாவிலே பொருளுக்காகப் பிரசங்கஞ் செய்கின்ற குரு ஜாதிப் பிரஷ்டன் ஆவான். ஜனங்கள் அவனைப் பார்த்துக் காறி உமிழுவார்கள். வறுமையுற்ற எனது நாட்டு மக்களுக்காக உதவி தேடும்பொருட்டு நான் இங்கு வந்தேன். கிறிஸ்தவ நாட்டிலே கிறிஸ்தவர்களிடமிருந்து அஞ்ஞானிகளுக்கு உதவி தேடுவது எவ்வளவு கஷ்டமென்பதை நான் முற்றிலும் உணர்ந்துகொண்டேன்.



# புத்த சமயம் இந்து சமயத்தின் நிறைவு

1893-ம் ஆண்டு செப்டம்பர்மீ 26உ
அருளிச் செய்தது.

நான் பௌத்தன் அல்லன், இதனை நீங்கள் அறிவீர்கள். ஆயினும் ஒருவகையாக நான் பௌத்தனே. சீனு, ஜப்பான், இலங்கை ஆகிய இடங்களில் இப்பெரியாருடைய போதனைகள் கைக்கொள்ளப்பட்டு வருகின்றன. இந்தியா இவரைக் கடவுளுடைய அவதாரமென்று வழிபாடு செய்கின்றது. நான் பௌத்த சமயத்தைக் குறைகூறப் போகிறேனென்று இப்பொழுது சொல்லக் கேட்டீர்கள். ஆனால் நான் கருதுவது இதுவென அறிவிக்க விரும்புகிறேன்.

பூவுலகத்திலே கடவுளுடைய அவதாரமென்று யாரை நான் வழிபடுகின்றேனே அவர்மீது ஒருபொழுதும் குற்றங்கூறப் புகமாட்டேன். புத்தரைப் பற்றி நாங்கள் கொள்ளுகிற கருத்து எதுவெனின் அவருடைய போதனைகள் அவருடைய மாணுக்கர்களாலே சரிவர அறிந்துகொள்ளப்படவில்லை என்பதுவேயாம். வேதங்களிற் கூறப்படும் சமயமாகிய இந்துசமயத்துக்கும் இக்காலத்தில் பௌத்தசமயமென்று சொல்லப்படும் சமயத்திற்கும் உள்ள தொடர்பு யூதமதத்திற்கும் கிறிஸ்தவமதத்திற்கும் இடையேயுள்ள தொடர்பினை நிகர்த்தது. இயேசு

கிறிஸ்து யூதராயிருந்தார். சாக்கியமுனி இந்துவாயிருந்தார். யூதர்கள் இயேசுகிறிஸ்துவைத் தள்ளிவிட்டார்கள்; சிலுவையில் அறைந்துவிட்டார்கள். இந்துக்கள் சாக்கியமுனியைத் தெய்வமெனக் கொண்டு அவரை வழிபடுகின்றூர்கள். இக்காலத்து பௌத்த சமயத்துக்கும் புத்ததேவருடைய போதனைகள் என இந்துக்களாகிய எங்களாற் கொள்ளப்படுவனவற்றுக்கும் இடையேயுள்ள முக்கிய வேறுபாடுகளாவன : சாக்கியமுனி புதுவதாக ஒன்றினையும் பிரசங்கிக்கவில்லை. இயேசுநாதரைப்போல, அவரும் அழிப்பதற்கு அல்ல, நிறைவேற்றுவதற்காகவே வந்தார். பழையோராகிய யூதர்கள் இயேசு நாதரை அறிந்துகொள்ளவில்லை. புத்தரையோவென்றூல், அவரது சிஷ்யர்களே அறிந்துகொள்ளவில்லை. பழைய ஏற்பாட்டின் நிறைவுபேற்றினை யூதர்கள் அறிந்து கொள்ளாதவாறுபோல இந்துசமய உண்மைகளின் நிறைவுபேற்றினைப் பௌத்தர்கள் அறிந்து கொள்ளவில்லை. சாக்கியமுனி அழிக்கவரவில்லை; நிறைவேற்ற வந்தாரென்று மீண்டும் சொல்லுகிறேன். இந்துக்களினது சமயத்தின் நேராகிய நிறைவு அவருடைய போதனைகளேயாகும்.

இந்துக்களினது சமயம் கர்மகாண்டம், ஞான காண்டமென இருவகைப்பட்டது. ஞானகாண்டம் சந்நியாசிகளாலே சிறப்புறக் கற்கப்படுவது.

அதற்குச் சாதிபேதமில்லை. உயர்ந்தசாதியிலுள்ள மனிதனும் மிகத் தாழ்ந்த சாதியிலுள்ள மனிதனும்

இந்தியாவிலே சந்நியாசி யாகலாம். அப்பொழுது இருவரும் சாதியிலே சமத்துவம் அடைகின்றனர். சமயத்திலே சாதிவேறுபாடில்லை. சாதி என்பது ஜனசங்கக் கட்டுப்பாட்டுக்கு மாத்திரம் வேண்டியது. சாக்கியமுனி சந்நியாசியாக விருந்தார். வேதங்களிலே மறைந்துகிடந்த உண்மைகளை எல்லாம்தெரிந்தெடுத்து உலகெங்கும் பரப்பிய பெருந்தன்மை அவருக்கு உரியது. சமயப்பிரசாரஞ் செய்வதை முதன் முதல் உலகிலே சாதனைக்குக் கொண்டுவந்தவர் இவரே. ஒருசமயத்திலிருந்து மற்றொரு சமயத்துக்கு மாறலாம் எனும் எண்ணத்தை முதன் முதல் நினைத்தவர் இவரே. யாவர்பாலும் அற்புதகரமான இரக்கமுடையவராய் இருந்தார். சிறப்பாகப் பேதைகளிடத்தும் ஏழைகளிடத்தும் அன்புடையவராகவிருந்தார். இதுவே இவருடைய பெரிய மகிமை. இவருடைய சிஷ்யர்கள் சிலர் பிராமணர். புத்தர் போதித்த காலத்தில் சம்ஸ்கிருதம் இந்தியாவிலே வழக்குப் பாஷையா யிருக்கவில்லை. அது கற்றோர்மாத்திரம் படிக்கின்ற புத்தகங்களிலுள்ள பாஷையா யிருந்தது. புத்தருடைய பிராமண சிஷ்யர் சிலர் அவருடைய போதனைகளைச் சம்ஸ்கிருதத்திலே மொழிபெயர்க்க முயன்றார்கள். அவர் அவர்களை நோக்கி, "நான் ஏழைகளுக்காக வந்தேன், ஜனங்களுக்காக வந்தேன், ஜனங்களினுடைய பாஷையிலே பேசக்கடவேனாக," என்றார். அக்காலத்திலே இந்தியாவிலே வழங்கிய வழக்குமொழியிலே அவருடைய போதனைகளிற் பெரும்பாகம் எழுதப்பட்டிருக்கின்றது.

தத்துவ ஞானம் எது பேசினும் பேசுக; பிராமண வாதம் எதனைக் கொள்ளினும் கொள்ளுக; உலகிலே மரணம் என்பது இருக்கும் வரையும், மானிட இருதயத்திலே வலிமையின்மையிருக்கும் வரையும், அந்த வலிமையின்மையினாலே மானிடனுடைய இதயத்திலிருந்து அழுகுரல் எழும் வரையும் ஆண்டவனிடத்து நம்பிக்கை இருந்தே தீரும்.

தத்துவ ஆராய்ச்சியிலே புத்த பகவானுடைய சிஷ்யர்கள் வேதங்களாகிய நித்திய மலைகளை மோத முயன்றார்கள். அவற்றை நொறுக்க முடியவில்லை. ஆடவரும் பெண்களும் அன்போடு பற்றியிருந்த நித்தியமாகிய கடவுளைக் குறித்த எண்ணத்தை பௌத்தர்கள் கெடுத்துவிட்டார்கள். இதன் பயனாகப் புத்தமதம் இந்தியாவிலே இயல்பாகவே அழிந்து போயிற்று. புத்த மதத்தின் பிறப்பிடமாகிய இந்தியாவிலே இந்நாளிலே தன்னைப் பௌத்தனென்று சொல்லுவோன் ஒருவனுமிலன்.

பிராமண சமயமும் பிறரைத் திருத்த முயலுகின்ற முயற்சி, அதிசயமான இரக்கம், யாவர்மேலும் அன்பு, என்றித்தகைய அற்புத நலங்களை இழந்துவிட்டது. இந்நலங்கள் பௌத்த மதத்தினால் இந்தியப் பொதுமக்களுக்குத் தரப்பட்டவை. இவற்றினாலே இந்திய ஜனசங்கம் மிகச் சீர்திருத்தம் அடைந்திருந்தது. அக்காலத்திலிருந்த யௌனப்புரத்துச் சரித்திர ஆசிரியர் ஒருவர் அக்காலத்து இந்தியாவைப்பற்றி எழுதும்பொழுது இந்துக்களுள்ளே பொய் சொல்லுவோர் ஒருவருமிலர்; இந்தியப்பெண்

களுள்ளே கற்பு நெறி தவறினோர் ஒருவருமிலர் என எழுதினார்.

பௌத்த சமயமின்றி இந்து சமயம் வாழமாட்டாது. இந்து சமயமின்றி பௌத்த சமயமும் வாழ மாட்டாது. இவ்விரு சமயமும் பிரிந்துநிற்பது காரணமாக எவ்வுண்மையுணர்த்தப்படுகிறதெனின், பௌத்தராயினோர் பிராமணரது மூளை வலிமையும், தத்துவ ஆராய்ச்சியுமின்றித் தனித்து நிற்றல் கூடாதவாறு போலப் பிராமணர்களும் பௌத்தர்களுடைய இருதயமின்றித் தனித்து நிற்கமாட்டார்களென்னும் உண்மை ஈண்டு உணர்த்தப்படுகின்றது. பௌத்தரும் பிராமணரும் பிரிந்தமையே இந்தியாவினுடைய வீழ்ச்சிக்குக் காரணம். ஆதலினாலேதான் இந்தியா முப்பது கோடி பிச்சைக்காரருக்கு உறைவிடமாயிருக்கிறது. கடந்த ஆயிர வருடங்களாக வெற்றிகொள்வோருக்கு அடிமையாய்க் கிடக்கிறது. ஆதலினாலே, பிராமணனது அற்புதமான புத்திசாதுரியத்தோடு பெரியாராகிய புத்தர்பாற் காணப்பட்ட அன்புள்ள இதயம், மேன்மைதங்கிய ஆன்மா மனிதத்தன்மையை உண்டாக்கும் அற்புத வலிமை என்னும் இவற்றினை இணைத்து, ஒன்று கூட்டுவோமாக.



## கடைசிக் கூட்டத்திலே செய்த பிரசங்கம்

1893-ம் வருஷம் செப்டம்பர்மீ 27உ அருளிச் செய்தது.

உலகிற்குப் பொதுவாகிய சர்வசமய ஆராய்ச்சிக்கழகம் நிறைவுபெற்ற நிகழ்ச்சியாக முடிந்துவிட்டது. இரக்கமுள்ள தந்தையாகிய கடவுள் அதற்காக முயற்சி செய்தோருக்கு உதவிபுரிந்து அவர்களது தன்னல விருப்பற்ற தொண்டினை அநுகூலப்படுத்தினர்.

இந்த அற்புதமான கனவினைத் தமது நிறைந்த சிந்தையினாலும், உண்மை விழைவினாலும் முதலிலே கனவாகக்கண்டு பின்பு காரியமாக்கிய நல்லோருக்கு எனது நன்றி உரியதாகுக. இம்மேடையினின்றும் அன்பு மொழியாகிய மாரியைச் சொரிந்து அதனைப் பெருக்கெடுக்கும்படிச் செய்தோருக்கு எனது நன்றி உரியதாகுக. அறிவின் மிக்க இச்சபையிலிருந்து என்பால் என்றும் மாறா அன்பு காட்டிச் சமய சமரசத்துக்கு உரிய எண்ணங்களை நன்கு மதித்த அறிஞருக்கு எனது நன்றி உரியதாகுக. இடையிடையே இவ்வின்னிசையோடு சில அவசுரங்களும் கேட்கப்பட்டன. அவற்றுக்கும் எனது நன்றி உரியதாகுக. வேறுபட்டு நின்ற காரணத்தினாலே ஒற்றுமைப்பாலதாகிய சமரசத்தினை அவை அதிக இனிமையாக்கிவிட்டன.

சமய பேதங்களின் ஒற்றுமைக்கே இடமாகிய பொது நிலத்தைப்பற்றிப் பல குறிப்புகள் சொல்லப்பட்டன. எனது சொந்தக் கொள்கையைப்பற்றி இப்பொழுது நான் சொல்லப் புகவில்லை. இத்தகைய ஒற்றுமை ஒரு சமயத்தின் வெற்றியினாலும் ஏனையவற்றின் அழிவினாலும் எய்துமென நம்புவோர் யாரேனு மிருப்பின், அன்னாருக்கு நான் சொல்லுவது ஒன்று உண்டு. அஃதாவது "சகோதரனே, நீ கொண்ட நம்பிக்கை நிறைவேறா நீர்மையது" என்பது. கிறிஸ்தவன் இந்துவாக வரவேண்டுமென்று நான் விரும்புகிறேனா? ஆண்டவன் அங்ஙனம் நிகழாது தடுப்பாராக. இந்துக்களோ, பௌத்தர்களோ கிறிஸ்தவராக வேண்டுமென்று நான் விரும்புகின்றேனா? ஆண்டவன் அதனையும் தடுப்பாராக.

விதை பூமியிலே போடப்படுகிறது; மண்ணும், காற்றும், நீரும் அதனைச் சூழ்ந்திருக்கின்றன. விதையானது மண், காற்று, நீராகின்றதா? இல்லை. அது ஒரு செடியாகின்றது. தனக்குரிய வளர்ச்சி விதிக்கு இயைய விருத்தியடைகின்றது. காற்றையும், மண்ணையும், நீரையும் உண்டு அவற்றைத் தனக்கு வேண்டிய சத்துப்பொருளாக்கி ஒரு செடியாக வளருகின்றது.

சமயம் விருத்தியடைவதும் அவ்வாறே. கிறிஸ்தவன் இந்துவாகவோ, பௌத்தனாகவோ வரவேண்டியதில்லை. இந்துவோ, பௌத்தனோ கிறிஸ்தவனாக வேண்டுவதில்லை. ஒவ்வொன்றும் மற்றதனுடைய நல்ல பாகங்களை உட்கொண்டு தனக்குரிய வளர்ச்சி

விதியின்படி தனது தன்மையைப் பாதுகாத்து வளரு தல் வேண்டும்.

சர்வசமய ஆராய்ச்சிக் கழகம் உலகிற்குச் சிறப் புறக் காட்டிய உண்மை யெதுவெனின், பரிசுத்தம், தூய்மை, இரக்கம் என்னு மிவை உலகிலுள்ள எந்தச் சமயத்துக்காவது சொந்த உரிமை யாகாது அனைத்தினுக்கும் பொதுவாகவுள்ளன என்பது. எல் லாச் சமய முறைகளும் அதியுயர்ந்த ஒழுக்கமுடைய ஆடவரையும் பெண்டிரையும் உண்டாக்கி யிருக்கின் றன. இந்தச் சான்று இவ்வாருகத் தனது சொந்த சமயம் மாத்திரம் தனித்துப் பிழைத்திருக்க ஏனைய சமயங்கள் அழிந்துவிடுமென யாரேனும் பகற் கனவு காண்பானுயின் எனது மனப்பூர்வமாக நான் அவன் பால் இரக்கப்படுகின்றேன். ஏனெனில் ஒவ்வொரு சமயத்தின் கொடியிலும், "உதவிசெய், சண்டை யிடாதே, ஒன்றுபடுத்து, அழித்துவிடாதே; சமரச மும் சாந்தமும் வேண்டும், வேறுபாடு வேண்டாம்" என எழுதியிருப்பதை நான் அவனுக்குக் காட்டு வேன்.

---

கேசரி அச்சுக்கூடம், சென்னை.

# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

## நோக்கங்கள்

1. ஆத்ம விடுதலைக்காகவும் தேச நலத்துக்காகவும் உழைப்பதற்கென உலகவாழ்க்கையை விடுத்துத் தங்கள் உடல்பொருளாவி யனைத்தும் தத்தம் செய்து முன்வரும் இளைஞர்களுக்குத் தக்க பயிற்சி யளித்து, நிஷ்காம கர்மம், பக்தி, யோகம், ஞானம் முதலிய வழிகளில் பழக்குவித்தல்.

2. பயிற்சிபெற்ற பிரசாரகர்களைக்கொண்டு இந்தியாவிலும் இதர நாடுகளிலும் சர்வ சமய சமரஸத்தைப் பரவச்செய்து சகோதரத் தன்மையை வளர்த்தல்.

3. உலகிற்றோன்றிய மக்களெல்லோரிடமும் இறைவன் உறைகின்றான் எனக்கொண்டு அவர்களுடைய வறுமை பிணி முதலிய கஷ்டங்களை நீக்கவும், எல்லோருக்கும் ஒழுக்கம், அறிவு, ஆத்ம ஞானம் முதலியவற்றை யளிக்கவும் முயலுதல்.

---

"நானோர் இந்தியன்; ஒவ்வொரு இந்தியனும் எனது சகோதரன்" என்று பறைசாற்று. "அறுதை இந்தியன் அறிவில்லாத இந்தியன், ஏழை இந்தியன் பிராம்மண இந்தியன், பறைய இந்தியன்—ஒவ்வொருவனும் எனது சகோதரனே. இந்திய மண்ணே எனக்கு உயர்ந்த சொர்க்கமாவது; இந்தியாவின் நன்மையே என்னுடைய நன்மை" என்று கூறுக.

ஏழை, கல்லாதவன், அறிவிலி, பிணியாளன்—இவர்களே உனது தெய்வம் ஆகட்டும். இவர்களிடத்துத் தொண்டு செய்வதே மேலான புண்ணியம் என்பதை அறி.

என்றும் சுயபலத்துடன் நின்று இறப்பாயாக; பாபம் என்பதொன்று உளதாயின், அது பலஹீனமே; பலஹீனமே பாபம்; அதுவே சாவு. ஆதலால், எல்லாப் பலஹீனத்தையும் ஒழி.

சுவாமி விவேகானந்தர்.